வரலாற்றுச் சிறப்பும் இலக்கியப்படைப்பும் அமைந்த

# விசயமங்கலமும்

## அதன் சுற்றுப்புறக் கோவில்களும்



ஆசிரியர் :

திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள்

பொருளுதவி:

திரு. A. ஜெயகுமார் ஜெயின் அவர்கள்

வெளியிடுதல்

ஜைன இலக்கிய ஆராய்ச்சி மன்றம்

JAIN LITERATURE RESEARCH SOCIETY

MADRAS

1965

# DEDICATED

*With humble heart*

*to*

Sri. M. BAKTAVATSALAM

( Chief Minister and Minister in Charge of
Hindu Religious Endowments, Madras State)

Who has taken keen interest in improving
the Historical and Literary Value of
Vijayamangalam Temple.

Madras }
25-9-65 }

T. S. SRIPAL

# முன்னுரை

சென்னை சட்ட சபையின் 1965-ம் ஆண்டு ஜனவரித் திங்கள் 20-ம் நாள் கூட்டத்தில் பின்வருமாறு கேள்விகள் கேட்கப்பட்டன.

"சில கோயில்களுக்கு மானியம் வழங்கியது போன்று, கிருஸ்துவர், இஸ்லாமியர் ஸ்தாபனங்கள் நடத்தும் கோயில்களுக்கும் வழங்கப்படுமா? என்றும், ஆங்காங்கு சிதறிக் கிடக்கும் சிலைகள், சிற்பங்கள் ஆகியவற்றை ஒன்று திரட்டி தஞ்சையில் உள்ளது போன்று வேறிடங்களில் அமைக்க உத்தேசம் உண்டா?" என்றும் இரு அங்கத்தினர்களால் கேட்கப் பட்டன. இக் கேள்விகளுக்கு நமது மதிப்புக்குரிய முதல் அமைச்சர் உயர்திரு. M. பக்தவத்சலம் அவர்கள் விடை யளிக்கையில்,

"பழங்காலக் கல்வெட்டுச் செய்திகள், நீண்ட கால வரலாற்றுச் சிறப்புள்ளதாக இருந்தால், மானியம் வழங்குகின்றோம்" என விடை யளித்தார்கள்.

மேலே கூறிய கேள்விகளையும், விடைகளையும் பத்திரிகைகளில் படித்ததும் யான் வியப்புற்றேன். கேள்வி கேட்ட அங்கத்தினர்கள் இஸ்லாமியர், கிருஸ்துவர் சமயக் கோயில்களைப் பற்றி அக்கறை கொண்டனரேயன்றி, மிகமிகப் பழங்காலந்தொட்டு தமிழ் மொழிக்கும், மக்கள் பண்பாட்டிற்கும் அரும்பெரும் இலக்கியங்களையும், இலக்கணங்களையும், நிகண்டுகளையும், நீதி நூல்களையும் படைத்து அளித்தருளிய ஜைன சமயக் கோயில்கள், மலைக் குகைகள் பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லையே என வருந்தினேன். இந் நிலையில் தமிழகம் ஜைன சமயத்தை மறந்திருப்பதை எண்ணி தன் கையே தனக்குதவி என்ற ஆன்றோர் மொழியின் வழிநின்று 7—2—1965-ல் நமது மதிப்புக்கும் பெருமைக்கும் உரிய முதல் அமைச்சர் அவர்களுக்கு ஜைன சமயத்தவரின் வேண்டுகோள் அறிக்கை அச்சிட்டு தமிழ் நாடெங்குமுள்ள ஜைனப் பெருமக்களின் கையொப்பங்களுடன் அமைச்சர் அவர்களிடம் சமர்ப்பித்தேன்.

அவ் அறிக்கையில் விசயமங்கலம், சீனபுரம், திங்களூர், வெள்ளோடு, அருங்குளம், கரந்தை, திறக்கோயில், திருப்பரிதிக்குன்றம், திருமலை பூண்டி, கோவிலாம்பூண்டி, ஆர்ப்பாகை, அனுமந்தக்குடி, போன்ற பழம்பெருங் கோயில்களின் வரலாற்றுச் சிறப்புக்கள் கொண்ட குறிப்புக்களுடன் அவைகளின் சீர்குலைந்த நிலைகளைப்பற்றி விளக்கியும், தமிழ் நாட்டில் ஆங்காங்கு சிதறிக் கிடக்கும் ஜைன சிலைகள், சிற்பங்கள் ஆகியவற்றைத் திரட்டி ஒரு ஜைனப் பொருட்காட்சி அமைக்குமாறும் வேண்டுகோள் விடுத்திருந்தேன். இவ் வேண்டுகோள் அறிக்கையின் நகல்களை சட்டசபை அங்கத்தினர் பலருக்கும் அனுப்பிவைத்தேன். பின்னர் மார்ச்சு மாதம் 20-ம் தேதி, முதல் அமைச்சர் அவர்களின் அனுமதியின் பேரில் என்னுடன் "திரு. G. சாமிநாத்ஜெயின், திரு. S. கெஜபதிஜெயின், திரு. பரதசக்ரவர்த்தி, திரு. மல்லிநாத் ஜெயின் சாஸ்திரி" ஆகியவர்களை அழைத்துச் சென்று நமது பெருமைக்குரிய முதல் அமைச்சர் திரு. M. பக்தவத்சலம் அவர்களைப் பேட்டி கண்டு அறிக்கையில் குறித்துள்ள கோயில்களின் வரலாறுகளையும் அவைகளைப் பழுது பார்த்து மானியம் வழங்கவேண்டிய அவசியத்தையும் விளக்கிக் கூறினேன். அமைச்சர் பெருந்தகை அவர்கள் எங்கள் கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டு தற்சமயம் இலக்கியச் சிறப்பமைந்த விசயமங்கலத் திருப்பதியைக் கவனித்து ஆவன செய்வதாகவும், சென்னை பொருட்காட்சியிலேயே ஜைனப் பொருட்காட்சி அமைக்க ஏற்பாடு செய்வதாகவும் உறுதி கூறியதோடு விசயமங்கலத்தைப் பற்றிய வரலாற்றை எழுதித் தருமாறும் பணித்தார்கள். யாங்கள் அன்புக்குரிய அமைச்சர் அவர்களுக்கு வணக்கமும், நன்றியும் செலுத்திவிட்டு விடைபெற்றுச் சென்றோம். அமைச்சர் பெருந்தகைப் பணித்தவாறு விசயமங்கலத்தின் வரலாற்றை உருவாக்கி ஒரு வாரத்திற்குள் அமைச்சர் அவர்களிடம் அளித்தேன். இவ் வரலாற்றை எனது அன்புக்குரிய நண்பர் திரு. எஸ். ஆர். சுப்பிரமணியம் அவர்களிடம் அளித்து அவர் நடத்திவரும் "காந்தி வழி" என்ற

இதழில் வெளியிடுமாறு வேண்டிக்கொண்டேன். இவ்வாறே "சுதேசமித்திரன்—ஞாயிறு மலர்" ஆசிரியரிடமும் வேண்டிக்கொண்டேன். அவர்கள் இருவரும் விசயமங்கல வரலாற்றுக் கட்டுரையை முறையே 13—6—65-ல் "காந்தி வழி" இதழிலும் 3—7—65-ல் "சுதேசமித்திரன் ஞாயிறு மலரிலும்" வெளியிட்டார்கள். இதற்கிடையில் 26—5—65-ல் சென்னை அரசாங்க அறநிலைய பாதுகாப்பு ஆணையாளர் உயர்திரு N. S. சாரங்கபாணி முதலியார் B. A., B. L. அவர்கள் முதல் அமைச்சர் அவர்களுக்கு 7—2—65-ல் அனுப்பிய வேண்டுகோள் சர்பந்தமாகத் தமிழகத்திலுள்ள பண்டைய ஜைனக் கோயில்களின் குறிப்புகளுடன் 14—7—65-ந் தேதி தமது அலுவலகத்தில் வந்து காணுமாறு எனக்குக் கடிதம் எழுதிப் பணித்தார்கள். அவ்வாறே யான் 14—7—65-ந் தேதி என்னுடன் வந்தவாசி தாலுக்கா திறக்கோயிலிலுள்ள ஜைன மலைக் கோயிலின் புகைப்படங்களுடன் அவ்வூர் நண்பர் திரு. C. சந்திரநாத் ஜெயின் அவர்களையும் அழைத்துக்கொண்டு அறநிலைய ஆணையாளர் அவர்களிடம் சென்றேன். அறநிலைய ஆணையாளர் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் இயற்கை அன்பு தவழும் அப்பெரியார் எங்களை நன்கு வரவேற்று அறிக்கை சம்பந்தமான எல்லா செய்திகளையும் கேட்டு அறிந்து மகிழ்ந்தார். விரைவில் இக் குறிப்புகளை அரசாங்கத்திற்கு அனுப்பி அவைகளுக்கான எல்லா முயற்சிகளையும் செய்வதாக உறுதி கூறினார்கள். அப்பெருந்தகை ஆணையாளருக்கு எங்கள் நன்றிகலந்த வணக்கத்தைச் செலுத்தி விடைபெற்றுத் திரும்பினோம். அறநிலையத்தார் திங்கள்தோறும் வெளியிடும் "திருக்கோயில்" என்ற இதழின் ஆசிரியரும் எனது அன்புக்குரிய வருமாகிய புலவர் முருகவேள் அவர்களைச் சந்தித்து 'விசயமங்கலம்" கட்டுரையை "திருக்கோயில்" இதழில் வெளியிடுமாறு வேண்டிக் கொண்டு கட்டுரையையும் விசயமங்கலக் கோயில் புகைப்படங்களையும் அளித்துவிட்டு வந்தேன். அப் பெரியாரும் அறநிலைய ஆணையாளர் இசைவுபெற்று 1965 ஆகஸ்டு இதழில் அழகாக வெளியிட்டுச் சிறப்பித்

தார்கள். விசயமங்கல ஜைனக் கோயில் சம்பந்தமான புகைப்படங்களை எடுத்து அனுப்பியவர் கோவை பிரபல வியாபாரிகளான திரிபுவன்தாஸ் வந்த்ராவன் கம்பெனியைச் சேர்ந்த திரு. சாந்திலால்ஜெயின் அவர்களாவர். அவர் ஜைன சமயத்தவராகையால், விசயமங்கலத்தின்பால் பேரன்புகொண்டவர் அவர் மாதம் இருமுறை விசயமங்கலம் சென்று வழிபாடு செய்துவருபவர். ஆகவே எனது வேண்டுகோளை ஏற்று புகைப்படங்களை அனுப்பி உதவினார்கள். கோவை விவசாயக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. பண்டித. இராம மீனாட்சிசுந்தரம் பிள்ளை, M A. அவர்களும், திரு. சாந்திலால்ஜெயின் அவர்களுடன் விசயமங்கலத்திற்கான முயற்சிகளில் பெரிதும் ஈடுபட்டு வந்துள்ளார். ஈரோடு புலவர் செ. இராசு அவர்களின் தூண்டுதலாலும் துணையாலும் யானும், திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி அவர்களும், 1961–ல் விசயமங்கலத்தையும் மற்ற திருப்பதிகளையும் கண்டுகளித்தோம்.

விசயமங்கலத்தை நேரே காணும் வாய்ப்பு ஏற்பட்டதால் இந்நூலை விரிவாகவும் விளக்கமாகவும் எழுத இயன்றது. விசயமங்கல வரலாற்றுச் செய்திகளை அறிய தமிழ்ப் பெரியார் டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் முதன்முதல் வெளியிட்ட பெருங்கதை இலக்கியத்தின் முன்னுரையும், கோவைகிழார் எனப் புகழப்படும் உயர்திரு. T. M. இராமச்சந்திரம் செட்டியார், B.A., B.L. அவர்கள் எழுதிய கொங்குநாடும் சமணமும் என்ற நூலும், ஈரோடு புலவர். செ. இராசு அவர்கள் எழுதிய கட்டுரையும் பெரிதும் துணைபுரிந்தன. இச் சிறு நூல் விசயமங்கலச் சிறப்பை அறிய ஒரு வழிகாட்டி (guide) என்ற வகையில் அமைத்துள்ளேன். இவ் வரலாற்றுச் சிறப்பைக் கண்ணுற்ற எனது ஆருயிர் நண்பர் திரு A ஜெயகுமார் ஜெயின் அவர்கள் இக் கட்டுரையைப் படங்களுடன் நூல் வடிவாக வெளியிடின் பலரும் அறிந்துகொள்ள வாய்ப்பு ஏற்படுமாகையால் இதற்காகும் பொருள் செலவை யானே ஏற்றுக் கொள்ளுகின்றேன் என என்னைத் தூண்டினார்கள்.

திரு. A. ஜெயக்குமார் ஜெயின் அவர்கள் எனது பிறந்த ஊராகிய திருப்பறம்பூரைச் சார்ந்தவர். சென்னை, கல்கத்தா முதலிய நகரங்களில் இரயில்வே எலக்ட்ரிபிகேஷன் ஆபீஸ் சூபரிண்டெண்டாகப் பணியாற்றி ஓய்வுபெற்று வந்துள்ளார். அவர் இயற்கையிலேயே அடக்கமும் பொறுமையும் வாய்ந்தவர். சமயப்பற்றும் சமய நூல்களைப் பயில்வதிலும் பேரார்வம் படைத்தவர். எனவே இலக்கியச் சிறப்பமைந்த விசயமங்கல வரலாற்றுச் செய்தி அவர் உள்ளத்தை ஈர்த்தது. அதனை நூல் வடிவாக வெளியிட விழைந்தார் அவர் விருப்பத்தை ஏற்று யான் இந்நூலை உருவாக்கி வெளியிட்டுள்ளேன். இம் முயற்சிக்குக் காரணமாகவும் தூண்டுகோலாகவும் விளங்கிய நமது பெருமைக்குரிய முதல் அமைச்சர் அவர்களுக்கும், அறமே உருவாயமைந்த அறநிலைய ஆணையாளர் அவர்களுக்கும், விசயமங்கலக் கட்டுரையை வெளியிட்டுதவிய 'காந்தி வழி' 'சுதேசமித்திரன்' திருக்கோயில் ஆகியவற்றின் ஆசிரியர் பெருமக்களுக்கும், புகைப்படங்கள் எடுத்தனுப்பிய திரு. சாந்திலால்ஜெயின் அவர்களுக்கும், திரு. பண்டித. இராம. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களுக்கும், இந்நூலை வெளியிடப் பொருளுதவிபுரிந்த திரு. A. ஜெயகுமார் ஜெயின் அவர்களுக்கும் எனது உளம்கலந்த நன்றியையும் வணக்கத்தையும் செலுத்துகின்றேன்.

வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்நூலைப் புலவர் பெருமக்களும் கவிஞர்களும், மாணவ மாணவிகளும் பொதுமக்களும் படித்தறிந்து விசயமங்கலத்திற்கு விசயம் செய்தும், சுற்றுலா சென்றும் பெருங் கதை இலக்கிய விழா நடத்தியும், அக்கலைப்பதியை இலக்கிய யாத்திரைப் பதியாக விளங்குமாறு சிறப்பிக்க வேண்டுகிறேன்.

சென்னை,
25—9—65.

அன்பன்,
T. S. ஸ்ரீபால்

## விசயமங்கலம்

விசயமங்கலம் ஈரோட்டிற்கும் கோயமுத்தூருக்கும் இடையில் ஒரு ரயில் நிலையமாக விளங்குகிறது. ஈரோட்டிலிருந்து சுமார் 15 கல் தொலைவில் உள்ளது.



ஜினலயத்தின் உள் கோபுரம்.

இவ்வூர் பண்டைக்காலத்தில் வரலாற்றுச் சிறப்பமைந்த தலைநகரமாக விளங்கிற்று. கி.பி ஆரும் நூற்றூண்டில் கொங்கு இருபத்து நான்கு நாட்டினுள் குறும்பு நாட்டைச் சார்ந்திருந்தது. கொங்கு நாட்டின் நடுவண் உள்ளது.

## கொங்கு வேளிர்

விசயமங்கலத்தைத் தலைநகராகக்கொண்டு கொங்கு வேளிர் என்ற ஜைனப் பேரரசர் ஆட்சி புரிந்து வந்தார் இவ் வரலாற்றைப் பெருங்கதைப் பாயிரத்தில்,

"........................செழுந்தமிழ்ப்
பொங்கு மண்டலத்துட் கொங்கு மண்டலத்தில்
உறும்பல வளமார் குறும்பு நன்னாட்டில்
எப்பனு வலையும் தப்புதலின்றி
அங்கையா மலகமா அறிபெரியோர் செறி
மங்கைமா நகரின் மஞ்சையம் பரிமீத்
தங்குவேள் என வாழ் கொங்கு வேளிர்"

என்று கூறுவதால் அறிகின்றோம். இம்மன்னர் பெருந்தகை வடமொழியிலும் தமிழ் மொழியிலும் பெரும் புலவராகத் திகழ்ந்தார். இப் புலவரேறு உதயணன் வரலாற்றைப் பெருங்கதை என்னும் பெயரால் தலைசிறந்த தமிழ்க்காப்பியம் ஒன்றை இயற்றினர். இக் காவியத்தின் பெருமையை நமது மதிப்புக்குரிய உயர்திரு. கோவை கிழார் அவர்கள், "கொங்குவேளிர் ஆண்டிருக்கும் கவிப் போக்கு ஆங்கிலத்தில் டென்னிசன் (The Idills of the King) மன்னன் ஓவியங்கள் என்ற காவியத்துடன் ஒத்திட்டுப் பார்க்கலாம்" எனப் புகழ்ந்துள்ளதினின்றும் அக் காவியத்தின் பெருமை விளங்கும்.

## தமிழ்ச் சங்கம்

இம் மன்னர் பெருமான் தமிழ் மொழியில் பற்றும் பரிவும் உடையவராகையால் தமிழ் மொழியின் ஆக்கத்திற்கும், வளர்ச்சிக்கும் பணிபுரிய தமிழ்ச் சங்கம் ஒன்றை விசயமங்கலத்தில் தோற்றுவித்தார். இச் சங்கத்தில் இணையற்றப் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து தமிழ் மொழியை வளர்த்து வந்தார். பெருங்கதைப் பாயிரத்தில்,

"புலவர் கூட்டுண்ணும் புத்தமுதாக உதயணன் சரிதை ஓதினர்" எனக் கூறுவதால் புலவர் கூடித்தமிழ் வளர்த்த செய்தியும் உதயணன் சரிதை இயற்றிய செய்தியும் தெளிவாகத் தெரிகிறது. இவ்வூரின் ஒரு பகுதியைச் சங்கு வடம் என அழைக்கின்றனர். இப் பகுதியே தமிழ்ச்சங்கம் அமைந்த இடமாக இருக்கலாம். சங்க இடம் என்பதே சங்கு வடம் என மருவி அழைக் கப்படுகிறது

## இத் தமிழ்ச் சங்கத்தின் மாண்பு

கொங்கு நாட்டில் தோன்றிய தமிழ்ச் சங்கத்தின் பால் மற்றொரு தமிழ்ச் சங்கத்தார் பொறாமை கொண்டு அச் சங்கத்தாரின் திறனையறிய வேண்டி ஒரு கவியின் வாயிலாக வினா ஒன்றை எழுப்பி அக்கவியின் பொருளை யும் வினாவிற்குரிய விடையையும் அளிக்குமாறு கேட்ட னர் அக் கவியைக் கண்ணுற்ற கொங்கு வேளிர் தனது அரண்மனைப் பணிப் பெண் ஒருத்தியை அழைத்து அக் கவியின் பொருளையும் அதற்குரிய விடையையும் கூறு மாறு பணித்தார். அப் பணிப் பெண் அக் கவியை ஆழ்ந்து உணர்ந்து அருமையான விளக்கம் தந்தாள். அவ் விளக்கத்தைக்கேட்டு மகிழ்ந்த மன்னர் பெருமான் அப் பெண்ணையே வினாவிடுத்த அச் சங்கத்திற்கு அனுப்ப முடிவு செய்து புலவர்களுக்குரிய பல்லக்கு முதலிய விருதுகளுடன் அனுப்பி விடையளித்து வருமாறு வாழ்த்திப் பணித்தார். அப் பெண்ணரும் கலமாம் பணிப் பெண் அங்கு சென்று அச்சங்கப் புலவர்கள் வியப்புறும் வகையில் பொருத்தமான விடைபகர்ந்தாள். புலவர் பலரும் மேதையாம் அம் மாதைப் போற்றிப் புகழ்ந்தனர். இவ் வரலாற்றைக் கொங்கு மண்டல சதகம்,

"நீதப்புகழ் உதயேந்திரன் காதை நிகழ்த்துதற்குக்
கோதற்ற மங்கையில் மூன்று பிறப்புற்ற கொள்
கையன்றி

கொங்கமண்டல சதகம் இயற்றிய புலவர் கார்மேகக் கவிஞ ரும் விசமங்கலத்தில் வாழ்ந்த ஜைன அறிஞரேயாவர்.

மேதக்க சொற் சங்கந்தார் வெள்கவே கொங்கு
வேள் அடிமை
மாதைக் கொண்டுத்தரம் சொன்
னதுவுங் கொங்கு மண்டலமே''



பெண் குலத்திற்குப் பெருமை தேடித்தந்த
அறிவு சான்ற அடிமை மாது

என வரும் கவியில் அருந்தமிழ் மாதைக் கொண்டு உத்தரம் சொன்னதுவுங் கொங்கு மண்டலமே எனப் புகழப் பெற்றுள்ளது. இத்தகு கல்வி நலம் பெற்றுயர்ந்த காரணத்தால் விசய மங்கலப் பெரும் பகுதியைத் 'தமிழ் மங்கை' என்றும் 'மங்கை மாநகரம்' என்றும் அக் காலப் புலவர் பெரு மக்கள் பலர் போற்றியுள்ளனர்.

கையில் ஓலைச் சுவடிகளுடன்

## ஐம்பெரும் புலவர்களின் உருவச் சிலைகள்





கொங்குவேளிர் தமிழ்ச் சங்கத்தில் வீற்றிருந்து தமிழ் வளர்த்த புலவர்களில் ஐம்பெரும் புலவர்களின் உருவச் சிலைகள் கையில் ஓலைச் சுவடிகளுடன் காட்சியளிக்கின்றன. இவ்வாறு தமிழ்ப் புலவர்களை உலகுக்கு அறிமுகம் செய்யும் வகையில் தமிழகத்தில் வேறெங்கணும் காணப்பட வில்லை. இந் நினைவுச் சின்னங்களால் கொங்குவேளிர் புலவர்கள்பால் கொண்டிருந்த பெரு மதிப்பும் பேரன்பும் புலனாகிறது. அவ்வாறே அறிவான் மிக்க அடிமை மாதுக்கும் சிலை அமைத்துள்ளார்.

## ஜினாலயம்



சந்திரப்பிரப தீர்த்தங்கரர்

விசய மங்கலத்தில் கொங்குவேளிர் அமைத்த ஜினாலயம் இன்றும் நின்று நிலவுகிறது. இக் கோயில் உட்புறத்

தில் எண்ணேடு எழுத்திரண்டும் இயம்பிய ஆதிமூர்த்தி யாகிய பகவான் விருஷப தேவருக்கும் எட்டாம் தீர்த்தங்கர ராகிய சந்திரப்பிரப தீர்த்தங்காருக்கும் இரு ஆலயங்கள் இருந்தன. இப்பொழுது ஆதி தீர்த்தங்கரராகிய பகவான் விருஷபதேவர் ஆலயம் சிதறுண்டு காணப்படுகின்றது.



ஆதிநாத பகவான்

சந்திரப்பிரப தீர்த்தங்கரர் ஆலயமும் மதிற்சுவர்களுமே இருக்கின்றன. இக் கோயிலை வீரசங்காதப் பெரும்பள்ளி எனச் சாசனம் கூறுகிறது. மன்னர் கொங்குவேளிர் வழி பாடியற்றிய இக் கோயிலின் முன் மண்டபத்தில்தான் நாம் முன்னர் கூறிய ஐம்பெரும் புலவர்களின் சிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. உள் மண்டபத்தின் நான்கு பக்கங்களிலுமுள்ள உத்தரங்களில் பகவான் விருஷப

தேவரின் வாழ்க்கை வரலாற்றுச் சிற்பங்கள் செதுக்கப் பட்டுள்ள காட்சி உள்ளத்தை மகிழ்ச்சியிலாழ்த்துகின்றது. தமிழகத்து ஜைனக் கோயில்களில் எங்கணும் காண விய லாத தனித்தன்மைவாய்ந்த அரிய சிற்பங்கள். வரலாற்றுச் சிறப்பும் இலக்கியப் பெருமையும் கொண்ட இக் கோயில் பாதுகாப்பின்றியும் போதுமான வருவாயின்றியும் சீர் குலைந்து வருகிறது.



மகாவீர பகவான்

இக் கோயில் பல சிறப்புக்களைக் கொண்டது. சந்திரப் பிரப தீர்த்தங்கரர் ஆலயத்தின் முன் மண்டபத்தின் தூண் ஒன்றில் பின்வரும் செய்தியைக் கொண்ட கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. கோமடேஸ்வரர் சிலையைத் தோற்றுவித்த சாமுண்ட ராஜனுடைய தங்கை புல்லப்பை

என்ற அம்மையார் நிசிதிகை செய்ததாகக் குறிக்கப்பட்டுள்ளது. அதாவது அப்பெருமாட்டியார் இக் கோயிலில் சல்லேகனை விரதமிருந்து உயிர்விட்டார்கள் என்பதாகும். இதற்குப் பண்டைய இலக்கியங்களில் வடக்கிருத்தல் என வழங்கப்பட்டிருப்பதை அறிஞர்கள் அறிவார்கள். எனவே இக் கோயிலின் புனிதத் தன்மையும் பெருமையும் விளங்குகிறது. இவ்வாறு கொங்கு சோழர்காலத்து கல்வெட்டுச் செய்திகளும் விசயநகரத்து ஹரிஹரராயன் கல்வெட்டுகளும் காணப்படுகின்றன.

## யாத்திரைப் பகுதி

விசய மங்கலம் கொங்குவேளிர் ஆட்சிச் சிறப்பும் பெருங்கதை என்னும் பெருங் காப்பியப் பிறப்பும் தமிழ்ச் சங்கப் பெருமையும் ஐம்பெரும் புலவர்களின் உருவச் சிலைகளின் காட்சியும் ஆதிபகவன் கோயிற் சிறப்பும் கொண்டு விளங்குவதால் இப் பெரும் பகுதி புலவர் பெரு மக்களுக்கும் கவிஞர்களுக்கும் தமிழார்வம் படைத்த அறிஞர்களுக்கும் மாணவ மாணவிகளுக்கும் கலைமலிந்த யாத்திரைப் பகுதியாகும். இவ்வாறு விசய மங்கலத்தை யாத்திரைப் பகுதியாக விளங்கச் செய்தால் தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் புலவர் பரம்பரைக்கும் கவிஞர் பரம்பரைக்கும் பெருமையும் அழியாப் புகழையும் உண்டாக்கும். இதற்கு எடுத்துக்காட்டாக விளங்கிய ஒரு அரிய நிகழ்ச்சியைக் காண்போம்.

ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப் பள்ளி தலைமைத் தமிழாசிரியர் புலவர் பெருந்தகை. **வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்** அவர்கள் எழுதிய ஒரு கட்டுரையில் காணும் நிகழ்ச்சி நமது கொள்கைக்கும் ஆர்வத்திற்கும் அரணாக அமைந்துள்ளது.

"நான் என் இளமைப் பருவத்தில் ஈரோட்டிற்கு வந்தேன். அப்பொழுது யாழ்ப்பாணம் உயர்திரு சி. தாமோதரம் பிள்ளை அவர்களின் குமாரர் திரு. **கிங்ஸ்பரி** என்பவர் இன்று நாலரை மணிக்குச் சொற்பொழி வாற்றுவார், இடம் லண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளி ஈரோடு என்று

எழுதப்பட்டிருந்த அச்சு விளம்பரம் ஒன்று எனக்குக் கிடைத்தது. திரு. தாமோதரம் பிள்ளையின் குமாரர் என்பதற்காக 4-30 மணி சுமாருக்கு அவரைப் பார்க்கச் சென்றிருந்தேன். அறிஞர் கூட்டம் திரண்டிருந்தது. அவர் அவ்விடம் இல்லை. 5-30 மணி சுமாருக்கு அப் பெரியார் நரைத்துப் பழுத்த முழுமைத் தோற்றத்துடன் ஆங்கில உடையில் காட்சியளித்தனர். நான் விரைவாக எழுந்து வணங்கி நின்று 'ஐயா அவர்கள் வருவதற்கு நேரமாய் விட்டது என்றேன். அவர் என்னை அமரச் செய்து என்னுடன் அமர்ந்து "**நான் உங்கள் கொங்குவேளிர் பிறந்த ஊரைப் பார்ப்பதற்குச் சென்றிருந்தேன்**" என்றார். எனக்குத் திகைப் புண்டாயிற்று. என் அடுத்த கேள்விக்கு விடையாக-நான் ஆங்கிலத்தில் தமிழிலக்கிய வரலாறு என்னும் நூல் எழுதுகிறேன். அதன்பொருட்டு கொங்குவேளிர் பிறந்த விசய மங்கலத்தைப் பார்க்கவே கொழும்பிலிருந்து இங்கு வந்தேன். அங்கு போய்வருவதற்கு இந்நேரமாய்விட்டது என்றார்கள். நான் அப் பெரியார் தமிழ் அறிஞர்கள்பால் கொண்டுள்ள ஆர்வத்தையும் பற்றையும் கண்டு உள்ளம் பூரித்தேன் என எழுதியுள்ளார்."

இந் நிகழ்ச்சியை ஆராயின் விசயமங்கலம் தமிழ்ப் புலவர்களின் உள்ளங்களை ஈர்க்கும் பெருமை வாய்ந்த தென்பதை மெய்ப்பிக்கிறது.

பெருங் கதையின் நூலாசிரியர் கொங்குவேளிர் வாழ்ந்த விசய மங்கலத்தைக் கண்டு மகிழ்வதற்கு ஈழத்திலிருந்து வருகை தந்த அறிஞர் திரு. கிங்ஸ்பரி அவர்களுக் குண்டாகிய தமிழ்ப் பற்றும் பண்டைய இலக்கிய வரலாற்றுப் பதியைப் போற்றும் பண்பும், தமிழகத்திலுள்ள புலவர்களுக்கும், கவிஞர்களுக்கும் தமிழ்ப் பேரன்பர்களுக்கும், வரலாற்றாராய்ச்சித் துறையினருக்கும், ஏற்படும் என்பதில் ஐயமில்லை.

தமிழகத்தின் தலைசிறந்த வரலாற்றுப் பதிகளில் விசய மங்கலம் இலக்கிய வரலாற்றுத் திருப்பதியாகும். விசய மங்கலத்திற்கு விசயம் செய்யுங்கள் என அறைகூவி அழைக்கிறது வரலாற்றுச் சான்று! விசயமங்கலம் பழம்

பெரும் கலைப்பகுதியைக் கண்டு களியுங்கள் என்கிறது கொங்குவேளிரின் இலக்கியத் தொண்டு! தமிழகத்துப் புலவர் பெருமக்களே! கவிஞர்களே! உங்கள் முன்னோடிகளாய் விளங்கும் எங்கள் உருவச் சிலைகளைக்காண வாருங்கள் என அன்போடு அழைக்கின்றன ஐம்பெரும் புலவர்களின் உருவச் சிலைகள்! தமிழகப் பெருமக்களே தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும் ஆக்கத்திற்கும் பணியாற்றிய ' தமிழ் மங்கையாம் '' விசய மங்கலத்திற்கு வீறுகொண்டு வாருங்கள் என்கிறது கொங்கு வேளிர் தமிழ்ச் சங்கம்! மன்னர் பெருமானும் இணையற்ற தமிழ்ப் புலவருமான கொங்கு வேளிர் ஆட்சி செலுத்தியும், தமிழ்ச் சங்கம் அமைத்துத் தமிழ் மொழியை வளர்த்தும் வந்த விசய மங்கலத்தை நமது சென்னை அரசாங்கம் பாதுகாக்கவும், புதுப்பிக்கவும் இலக்கிய யாத்திரைத் தலமாக விளங்கச் செய்யவும் கடமைப்பட்டுள்ளது. பழம் பெரும் புதை பொருள் ஆராய்ச்சியாளரின் தலையாய கடமையுமாகும். இவ்வாறு யாத்திரைத் தலமாகவும் சுற்றுலாவினர் கண்டு களிக்கும் பதியாகவும் ஏற்பாடு செய்யின் நமது பாரதநாட்டு அறிஞர்கள் மட்டுமின்றி அயல்நாட்டுப் பேரறிஞர்களும் விசயமங்கலத்தைக் காண விழைவார்கள். இவ்விலக்கிய யாத்திரையால் தமிழகத்திற்கும் தமிழ் மொழிக்கும் மேலும் மேலும் புகழும் பெருமையும் வளர்ந்து உலகெலாம் பரவும். ஆதலின் ஆண்டு தோறும் அறிஞர்கள் அனைவரும் அவ்விடத்தில் கூடி கொங்குவேளிர் நினைவு விழாக் கொண்டாடுவோமாக!

நமது மதிப்பிற்குரிய தமிழக முதல் அமைச்சர் உயர்திரு. **M. பக்தவத்சலம்** அவர்கள் விசயமங்கலத்துக் கோயிலைப் புதுப்பித்து அக் கலைப்பதி மறுமலர்ச்சி பெற்று யாத்திரைப் பகுதியாகவும் சுற்றுலாக் காட்சி நகராகவும் விளங்க ஆவன செய்வதாக உறுதி கூறியுள்ளார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். இப் பெரும் பணிக்குத் தமிழக மக்கள் பலரும் பெருந்துணை புரிந்து சிறப்பிக்கக் கோருகிறேன்.

தமிழ் மங்கையாம் விசயமங்கலக் கலைப்பதியைக் கண்டு களிப்பதோடு நமது புனித யாத்திரை நின்றுவிடவில்லை. ஜைன அறவோர்கள் தமிழ்மொழி சிறப்புற அரும்

பெரும் இலக்கியங்கள், இலக்கணங்கள், இசை, நாடகம், நீதி நூல் ஆகியவற்றை வழங்கிய அரிய காட்சிகளையும் விசய மங்கலத்தைச் சுற்றி பத்து மைல்களுக்குள்ளாக விளங்கும் பல்வேறு திருப்பதிகளையும் காணலாம்.

## நன்னூல் யாத்த திருப்பதி

புலவர் பெரு மக்கள் பலராலும் போற்றிப் புகழும் **நன்னூல்** என்னும் தலைசிறந்த இலக்கண நூலை இயற்றி யருளிய **பவணந்தி முனிவர்** பிறந்து வாழ்ந்த சனகாபுரத்தை அக் கால மக்கள் ஜினபுரம் எனச் சிறப்புப் பெயரால் அழைத்துப் போற்றியது பிற்காலத்தில் சீனாபுரம் என மருவி வழங்கப்படுகிறது. அக் கிராமத்தில் பவணந்தி முனிவர் வழிபாடியற்றிய ஆதி நாதர் கோயில் இன்றும் நின்று நிலவுகிறது. இக் கோயில் பவணந்தி முனிவரின் நினைவுச் சின்னமாக அமைந்துள்ளது. இவ் வரலாற்றை,

**‘ கங்கக் குரிசில் உவக்கநன் னூலைக் கனிந்துபுகல்**
**துங்கப் புலமைப் பவணந்தி மாமுனி தோன்றிவளர்**
**கொங்கிற் குறும்பு தனில் ஆதி நாத குருவிளங்கும்**
**மங்குற் பொழிற்சன காபுர மும்கொங்கு மண்டலமே ’**

எனக் கொங்கு மண்டல சதகம் போற்றுகிறது. தொல் காப்பியத்திற்குப்பின் புலவர் உள்ளங்களைக் கவர்ந்த பவணந்தி முனிவரின் பழம் பதியைக் கண்டு களிக்க வேண்டாமா?

## அடியார்க்கு நல்லார்

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்திற்கு முதன் முதல் உரை எழுதிய **அடியார்க்கு நல்லார்** வாழ்ந்த நிரம்பை என்ற பெயர் பெற்ற பேரிடமும் விசய மங்கலத்தின் அருகில் விளங்குகிறது. இவ்வுண்மையை,

“ வருவிசய மங்கையும் நிரம்பையும் கூடலூர்
மருவுறு சிறுக்கழிஞ்சி ”

எனக் குறும்பு நாட்டு ஊர்த்தொகைப் பாடலும்,

✤ ‘ குருவையுணர்ந்த இளங்கோவடிகளுட்
கொண்டு சொன்ன

தருவை நிகழும் சிலப்பதிகாரத் தனித்தமிழுக்கு
அருமை உரை செய் அடியார்க்கு நல்லார்
அவதரித்து
வருமைப் பொழில் நிரம்பைப் பதியுங் கொங்கு
மண்டலமே "

எனப் போற்றும் கொங்கு மண்டல சதகமும் தெளிவாக விளக்கியுள்ளன. அடியார்க்கு நல்லார் மோரூர்ப் பொப்பண்ண காங்கேயன் என்ற கொங்கு நாட்டு வள்ளலால் ஆதரிக்கப் பெற்ற ஜைன அறவோர். இப்பேராசிரியர் இலக்கிய மேதையாக விளங்கியதுமன்றி அரசியல் மேதையாகவும் விளங்கினர். இவர்தம் பேரறிவைக்கேட்டறிந்த ஈழத்துநாட்டு சிங்கநல்லூர்பேரரசன் இவரைத் தமது இராஜ்ஜியத்தின் அமைச்சராக அமர்த்திக்கொண்டார். அங்குதான் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத் தனிக் காவியத்திற்கு உரை எழுதினர். ஆட்சித் திறனும், சிலப்பதிகாரச் செஞ்சொற் காவியத்திற்கு அரிய உரை எழுதிய பெருமையும் விளங்கப் பெற்ற அப்பேராசிரியரின் நினைவு ஈழத்து நாட்டில் என்றும் நின்று நிலவ அடியார்க்கு நல்லார் மண்டபம் என்றும் அடியார்க்கு நல்லார் குளம் என்றும் இரு சின்னங்களை அமைத்துப் போற்றினன் சிங்கநல்லூர் பேரரசன். அந்நினைவுச் சின்னங்கள் இன்றும் அங்கு காட்சி அளிக்கின்றன. ஈழத்து நாட்டு அரசன் அடியார்க்கு நல்லாரை அறிந்து சிறப்பித்தது போன்று தமிழக அரசியலாரும், புலவர்களும், பொது மக்களும் நிரம்பை கிராமத்தில் நினைவுச் சின்னம் அமைக்க வேண்டாமா? கடமையுமல்லவா? நிரம்பை கிராமம் விளங்கியவிடத்தில் ஒரு கல் தூண் அமைத்து அப் பேராசிரியரின் பெயரைப் பொறித்தாகிலும் நாட்டி வைக்கலாம்.

## இசையும், நாடகமும்

இசையும் நாடகமும் பயிற்றுவித்த கலைக்குன்றம் விசய மங்கலத்திற்கு சுமார் பத்து கல் தொலைவில் அறச்சலூர் என வழங்கும் ஒரு சிற்றூர் இருக்கிறது. இவ்வூரைப் பண்டைய காலத்தில் அறச்சாலையூர் என அழைக்கப்பட்

டது. இவ்வூருக்கு அருகில் ஒரு கலை மலை காணப்படுகிறது. இம் மலைக்கும் அறச்சலூர் மலை என்றே பெயர் வழங்கப்படுகிறது. இம் மலையின்மேல் ஜைன அறவோர்கள் தவம் இயற்றிய சின்னங்களும் கற்படுக்கைகளும் பிராமி எழுத்தாலான கல் வெட்டுச் செய்திகளும் காட்சி யளிக்கின்றன. மூன்று கல்வெட்டுகளில் ஒன்றில்,

"எழுத்தும் புணர்த்தான் மணிய
வண்ணக்கன் ஆதன் சாத்தன்"

என்றும் வேறு சிதறுண்டுள்ள கல் வெட்டுச் செய்திகளுள் நாட்டியக் குறிப்புக்கள் சிலவும் காணப்படுகின்றன. இவைகளை நன்கு ஆராய்ந்து தொல் பொருள் ஆராய்ச்சித் துறைத் தலைவர் உயர்திரு. T. N. இராமச்சந்திரன் M. A. F.A.S. அவர்கள் இந்துபத்திரிகை (Hindu) 20-5-1962ல் வெளியிட்டுள்ள கட்டுரையின் சுருக்கம் வருமாறு:

இக் குகை 1800 ஆண்டுகட்கு முற்பட்டது. இதன் அமைப்பு, பிராமி கல் வெட்டுக்கள். ஜைன அறவோர் படுக்கைகள் முதலியன புதுக்கோட்டை அருகில் உள்ள சித்தன்னவாசல் போன்றது. படுக்கையின் இரு பக்கங்களிலும் பிராமி எழுத்துக்களில் இரண்டு கல் வெட்டுக்கள்,

| | |
|---|---|
| சத கிதகி | தகை த தைந |
| கித கித | துது துதுது |
| தகி | தாதை திதைத |
| | தததி தாதை |
| | கிதா தாதை தா |

எனப் பொறிக்கப்பட்டுள்ளன. இவைகள் பரத நாட்டியத்தில் நட்டுவனர் மாணக்கர்களுக்குத் தாளத்தோடு சொல்லிக் கொடுக்கும் அடவு இசைத் தமிழ். இக் கல்வெட்டுகளால் ஆதன் சாத்தன் என்ற பல்கலைக் கலைஞன் தலைவனுகவும், ஆசிரியனுகவும், ஆடலாசிரியனுகவும் விளங்கிய ஜைன சான்ருேர் என்பது தெளிவாகிறது. சேரலாதன் போன்று ஆதன் என்ற சொல் தலைவனைக் குறிக்கும், எனவே இங்கு வீற்றிருந்த ஜைன முனிவர்கள் ஆசிரியர்

களாகவும் பல்கலைப் புலவர்களாகவும், தலைவர்களாகவும் விளங்கியுள்ளார்கள் என்பது தெளிவாகிறது என எழுதியுள்ளார். கலை வல்லோரே! இம் மலை யாத்திரைக்குரிய மாண்புடையதல்லவா? அக்கலை மலைக்கும் செல்லுங்கள். தொல் பொருள் ஆராய்ச்சி நிலையத்தாரும் அரசியலாரும் இம் மலையைப் பாதுகாப்பதுடன் மலையின்பேரில் செல்லுதற்கு வசதியானபடிகளை அமைத்து வழி செய்யவேண்டுமெனக் கோருகிறேன்.

திங்களூர் :—திங்களூரில் தென் எல்லையில் கோயில் தோட்டத்தில் அழகிய **புஷ்பநாதர் கோவில் விளங்குகிறது.** இவ்வூரைச் சந்திரவசதி என்று சாசனம் கூறும். கி. பி. 1045 ஆம் ஆண்டு அறத்துளான் முத்தன் பொன்னனுன நாளு கணித மாணிக்கஞ் செட்டி இக் கோவிலில் ஒரு மண்டபம் கட்டினுன். அதன் பெயர் 'சிங்களாந்தகன் பதுமுக மண்டபம்' என்பது. திங்களூரை ஊர்த்தொகைப் பாடல் 'பீடுபெறு திங்களூர்' என்று போற்றுகிறது.

பூந்துறை :—சந்தைக்கு அருகே பார்சுவநாத தீர்த்தங்கரர் கோவில் இருக்கிறது. பத்மாவதி தேவியின் அழகிய சிலை ஒன்றும் உள்ளது. சிதைந்த கல்வெட்டுகளும் இருக்கின்றன.

வெள்ளோடு :—ஊரின் வடக்கே வயல்களிடையில் **ஆதிநாதர் கோவில்** காட்சியளிக்கிறது. கோவில் மிகவும் சிதைந்துள்ளது. **சந்திரநாதர் சிலையும்** காணப்படுகிறது.

மேற்குறித்த ஊர்களில் வாழ்கின்ற மக்கள் இன்றும் சமய வேறுபாடின்றி அமணீசுவர சுவாமி என்று பெயரிட்டு இவ்வாலயங்களில் வழிபட்டு வருகின்றனர். இப்பகுதியில் சைவக் கோவில்கட்கு விடும் மானியத்திலிருந்து ஜினலயங்கட்கும் வழிபாடு நடத்தியதாக சர்க்கார் பெரியபாளையம் சுக்ரீவேசுரர் கோவில் கல்வெட்டுக் கூறுகிறது.

*(வீரபாண்டியன் கி. பி. 1273)*

இறுதியாக, யான் முன்னர் வேண்டிக் கொண்டது போன்று தமிழக அரசியலாரும், புலவர், கவிஞர் பெருமக்களும், குறிப்பாக ஜைனப் பெருமக்களும் விசயமங்

கலத்துக் கோயிலில் திருப்பணியாற்றி இலக்கிய யாத்திரைப் பதியாகச் சிறப்பிக்குமாறு வேண்டுகிறேன். இப்புனிதப் பணியில் சிறப்பாகக் கொங்கு நாட்டு பெருமக்கள் பங்கெடுத்துக் கொள்ளக் கடமைப்பட்டவர்கள் எனில் மிகையாகாது. இக்கடமையை கோவை கிழார் எனச் சிறப்பிக்கப்பெறும் உயர் திரு. T. M. இராமச்சந்திரம் செட்டியார் B.A.B.L., அவர்கள் தாம் எழுதிய கொங்கு நாடும் சமணமும் என்ற அரும்பெரும் நூலில் நேரிதின்நின்று விளக்கியிருக்கும் அரியவேண்டுகோளை கொங்கு நாட்டுப் பெருமக்களுக்கு நல் விருந்தாக அளித்து முடிக்கின்றேன்.

"சமண சமயம் சமயப் பெருக்கில் மட்டும் சிந்தை கொள்ளவில்லை. நாட்டினுடைய பண்பாட்டை வளர்த்துவதற்கும் முற்பட்டிருக்கின்றன. கல்விப் பெருக்கிலும், காவியங்களை இயற்றி இலக்கியங்களைப் பெருக்குவதிலும் நாட்டின் நாகரீகத்தை உயர்த்தியிருக்கின்றது. ஒப்பற்ற இலக்கியமாகிய பெருங்கதையை தமிழ் நாட்டிற்குத் கொடுத்திருக்கின்றது. மாணவர்கள் எளிதில் உணர்ந்து கொள்ளும் முறையில் நன்னூல் என்னும் தெளிந்த இலக்கணத்தைத் தந்திருக்கின்றது. பேருரைகளில் மிகச்சிறந்த உரையாகிய அடியார்க்கு நல்லார் உரையை வெளியிட்டிருக்கின்றது. இவ்வுரை இல்லாவிடில் பண்டைத் தமிழின் நற்கலைகளை நாம் அறிந்து கொள்ள வகையேயில்லை. இறுதியாகக் கொங்கு நாட்டு வரலாற்று நூலாகிய கொங்கு மண்டல சதகத்தையும் சமணசமயமே அளித்திருக்கின்றது. இவ்வாறு பலவகைப்பட்ட முறைகளிலும் கொங்கு நாட்டுப் பண்பாட்டைச் சமண சமயம் வளர்த்திருக்கின்றது என அறியலாம்.

மற்ற சமயங்களாகிய சைவமும் வைணவமும் கோயில்களுடைய எண்ணிக்கைகளை மிகுதிப் படுத்தினவேயன்றி இலக்கியப் பண்பாட்டை சமண சமயத்தைப் போல அவ்வளவாகச் செய்யவில்லை. வைதீக சமயங்களில் பெருங்கதை போன்ற ஓர் இலக்கியமோ, நன்னூல் போன்ற ஒரு இலக்கணமோ, அடியார்க்கு நல்

லார் உரை போன்ற ஒரு உரையோ, கொங்கு மண்டல சதகம் போன்ற ஒரு வரலாற்றுப் பிரபந்தமோ இயற்றப்படவில்லையென்று அறிய வேண்டும். ஆகவே கொங்கு மண்டலத்திற்குச் சமணசமயம் செய்திருக்கும் தொண்டு வேறு எதுவும் செய்யவில்லை என்பது திண்ணம்.

இந்த அரிய செய்திகளை அறிந்தபின் நாட்டுமக்கள் நன்றியைக்காட்டும் நெறியில் இருக்கவேண்டுமென்றால் ஏற்கெனவேயிருக்கும் சமணச் சின்னங்கள் அழிந்து போகாதபடி பாதுகாத்து வைப்பதே தகுந்த கடமையல்லவா? நமது நாட்டுமக்கள் அந்த கடமையை உணர்ந்து அச்சின்னங்களைப் போற்றுவார்களாக!

வாழ்க விசயமங்கலம்!

வளர்க கொங்குநாடு!



ஆதிநாதர் கோவில் இடிந்த பகுதி



அறச்சாலையூர் மலையிலுள்ள பிராமி கல்வெட்டுச் செய்திகள்



அறச்சாலையூர் மலையின் தோற்றம்

பாரதி பிரிண்டர்ஸ், 119, பிராட்வே, சென்னை-1